# துருவத் துளிகள்

**இ. தியாகலிங்கம்**




32/9 ஆற்காடு சாலை சென்னை 24

தமிழ்நாடு இந்தியா

THURUVA THULIKAL
by
R. THIYAGALINGAM
(A Collection of 40 poems)

First Edition - 31 October 2009

Mithra : 192

ISBN : 978-81-89748-79-1

Pages : 64

Price : Rs.95/-

Publication Editor
**Espo**

Mithra Books are Published by
**Dr. Pon Anura**

Designed, Printed & Published by
**Mithra Arts & Creations Pvt Ltd**
32/9 Arcot Road, Kodambakkam,
Chennai – 600 024.
Ph : 0091 44 - 2372 3182 / 2473 5314
Email : contact@mithra.co.in
Web : www.mithra.co.in

# என்னுரை

நடக்க நினைத்தாலும்
தவழவே முடிந்த ஏக்கம்...
தவழலிலும் தடங்கல்
முடங்கலாக...
தட்டுத் தடுமாறும்
என் எளிய வரிகள்.

வாஞ்சையாக வன்மமாக
தமிழைக் காதலி
என்கின்றது
தலைக்குள் ஒருகுரல்

இயந்திர வாழ்க்கை
என் நேரங்களை
இரையாக்க
அப்பொன்று இப்பொன்றாய்
உதிர்ந்த சிலவரிகள்...

குமுறலும் கொஞ்சலும்
ஏக்கமும் சோகமுமாக
துலைந்து போன
மனிதர்களின் சிதைந்து போன
முகங்களை காட்டும்
மழலை முயற்சி
இத்தொகுப்பு...

என் இலக்கிப் பயணத்தில்
விடிவெள்ளியாக விளங்கிய
எஸ். பொ அவர்களுக்கும்
இதற்கு முன்னுரை தந்த
தவிஞர் இங்குலாப் அவர்களுக்கும்

அச்சுப் பணியை அர்ப்பணிப்புடன்
செய்யும் மித்ர பதிப்பகத்தாருக்கும்
என் இலக்கிய வாழ்வை
விளங்க வைக்கும்
வாசகர்களுக்கும்
இதயம் உருக
என்நன்றிகள் உரித்தாகுக!

- **இ. தியாகலிங்கம்**

# முன்னுரை

'புலம்பெயர்தல்' என்ற சொல் சங்க இலக்கியத்திலேயே பயன்பட்டுள்ளது. 'புலம்பெயர் தேயம்', 'புலம்பெயர் புலம்பொடுகலங்கி ' என்று அகநானூற்றிலும் நெடுநல்வாடையிலும் பயில்வதைக் காணலாம். நெடுநல்வாடை சுட்டும் புலம்பெயர்தல்' முல்லை நிலத்திலிருந்து குறிஞ்சி நிலத்துக்கு மாடுமேய்க்க வந்த ஆயர்களின் துயரத்தைத்தான் குறிக்கிறது. 'புலம்பெயர் தேயம்' என்ற சொல் நாடுவிட்டு நாடு பெயர்ந்த நிகழ்வைக் குறிப்பதாகலாம். 'மொழிபெயர் தேஅம்' என்ற மற்றொரு அகநானூற்றுத் தொடர் தமிழல்லாத பிறமொழியினர் வாழும் பகுதியைக் குறிப்பது போலவே 'புலம்பெயர் தேயம்' என்பதும் சொந்த மண்ணைவிட்டுப் பிறநாட்டுக்கு, மண்ணுக்குச் செல்வதைக் குறிக்கலாம். எனினும் அரசும் நாடும் இழந்த துயரம் பாரிமகளிரின் 'அற்றைத் திங்கள்' என்ற பாடலில்தான் நெஞ்சில் அழுந்துவதுபோல் பதிவு செய்யப்படுகிறது. இதைப் புலம்பெயர்ந்து செல்லும் முதற் பாடலாகத் தமிழிற் கேட்டேன்.

உலகெங்கிலும் புலம்பெயர் வாழ்க்கைக்குத் தள்ளப்பட்ட மக்கள் தங்கள் தங்கள் மொழியில் 'அற்றைத் திங்களின்' பாடலைப் பாடுகிறார்கள். குர்திஸ்தான், பாலஸ்தீனம், ஆப்பிரிக்கா என்ற வரிசையில் தமிழீழத்தின் கவிஞர்களும் 'புலம்பெயர் புலம்பொடு கலங்கி' வாழ்கிறார்கள். பாடலாக மட்டுமல்லாது, சிறுகதையாகவும், புதின மாகவும், நாடகமாகவும் இப்புலம்பெயர் இலக்கியம் வளர்ந்து கொண்டிருக்கிறது. சென்ற, இந்த நூற்றாண்டின் மாபெரும் துயரம், என் கண்முன் நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

பாரிமகளிரின் ‘அற்றைத்திங்கள் வெறும் ரசனை’ சுகத்துக்காக மட்டும் இரண்டாயிரம் ஆண்டுகளாகப் பயிலப்படவில்லை. உணர முடிந்தவர்களுக்கு அந்த வரலாற்றுத்துயரம் நெஞ்சைப் பிடித்து உலுக்குகிறது. புலம்பெயர்ந்த துயரம், ஈழப்படைப்பாளிகளின் எழுத்துக்களை நனைத்துக் கொண்டிருக்கிறது; கண்ணீரால் மட்டுமன்று, இரத்தத்தாலுந்தான். ஈழப்படைப்பாளிகளின் எழுத்தும், ரசனை மட்டம் தாண்டி, கொடுமைக்கு எதிரான கண்டனமாகவும், ஆவணமாகவும் பேணப்படும் தகுதியைப் பெற்றுள்ளன.

திரு. இ. தியாகலிங்கம் அவர்கள் புலம்பெயர்வு வாழ்வின் துயரங்களையும் புகலிட நாடுகளில் எதிர்கொள்ளும் சிக்கல்களையும் புதினங்களாகவும் குறும் புதினங்களாகவும் படைத்துவருகிறார். இவருடைய அத்தனை எழுத்துகளிலும் எனக்கு அறிமுகம் இல்லாவிடினும், தோழர் எஸ்.பொ. அவர்களின் மூலம், சில வாசிப்புகள் சாத்தியமாகி வருகின்றன. இ. தியாகலிங்கத்தின் ‘நாளை’ நாவலுக்கு நான் ஒரு முன்னுரை எழுதிய செய்தி என் நினைவில் இல்லாமல் இருந்தது. ‘பரதேசி’ என்ற புதினத்துக்கு எஸ்.பொ.வின் முன்னுரையில் என் ‘நாளை’ முன்னுரையின் ஒரு பகுதியை மேற்கோள் காட்டுகிறார். இவருடைய அழிவின் அழைப்பிதழ், வரம், பரதேசி முதலிய படைப்புகளை அண்மையில்தான் வாசித்தேன் – இன்னும் முழுமையாக என்று சொல்லமுடியாது. புலம்பெயர் துயரத்துடன் புகலிடச் சிக்கல்களையும் இ. தியாகலிங்கத்தால் வலிமையாகப் பதிவு செய்ய முடிகிறது – ஒரு படைப்புக்குரிய கலை நியாயங்களோடு.

இப்பொழுது ‘துருவத்துளிகள்’ என்ற அவருடைய கவிதைத் தொகுப்பு என் மேசையில் விரிந்திருக்கிறது. எந்த ஒரு படைப்பாளியும், ஒரே வகையான வடிவத்தில் நிறைவு கொள்வதில்லை. ரவீந்திரநாத் தாகூர், படைப்பின் எல்லா வகையான கிண்ணங்களிலும் தனது எழுத்தை ஊற்றித் தந்தவர். அப்படிப் படைப்புக்கென்றே அர்ப்பணிப்பதற்கான ஒரு வாழ்க்கை அதிர்ஷ்டவசமாக அவருக்கு வாய்த்தும் இருந்தது. ஆனால், புகலிடங்களில் தியாகலிங்கம் போன்ற ஈழத்தமிழர்களின் வாழ்க்கை சிவப்புக்கம்பளமாகவா விரிந்து கிடக்கிறது? எதிர்பார்ப்புகளும், ஏமாற்றங்களும், துரோகங்களும், இழப்புகளும், இழிவுகளும் புரளும் ஒரு வாழ்க்கை. இங்கு படைப்பு முயற்சியே தன்னைப் பரவசப்படுத்திக் கொள்வதற்காக இருக்காது. விதிவிலக்காகச் சிலர் அப்படிப் படைக்கலாம். ஆனால், சமூக உணர்வுள்ள படைப்பாளிகளால் அப்படித் தம்மை மறந்த லயத்தை அடைய முடியாது.

குறும் புதினங்களாகவும், புதினங்களாகவும் வாழ்க்கையை, அகலப்படுத்திய திரைச்சீலைகளில் எழுதிப் பார்க்கும் தியாகலிங்கம், குமிழிகளாகவும், சுழிகளாகவும் படைக்க முயன்ற முயற்சியே இக்கவிதைத் தொகுப்பு எனலாம். ‘அழிவின் அழைப்பில்’ தொடங்கிய இவரது கதை சொல்லும் முயற்சி, தொடக்க காலப் பலவீனங்களைக் கடந்து, ஆற்றலுடன் எழுதிச் செல்லும் ஒரு புள்ளியை வந்தடைந்து இருக்கிறது. ‘துளிப் பூக்கள்’ கவிதையில் இவரது முதல் முயற்சி. இங்கும் பலவீனங்களைக் கடந்து நிறைவு கொள்வார் என்கிற நம்பிக்கை எனக்குண்டு.

**அழிகின்ற சொந்தங்களை**
**அவர்படும் இன்னல்களை**
**இணைய தளங்களில் பார்த்தும்**
**இதயம் வெடித்துச் சாகாமல்**
**அழுது அரற்றி**
**அதற்குமேல் ஒன்றும்**
**ஆற்ற இயலாது**
**புழுங்கித் தவிப்போர்தாம்**
**புலம்பெயர்ந்த தமிழர்**

என்று புலம்பெயர்ந்த தமிழர்களின் மனநிலையை எந்த ஒரு புனைவுமின்றி வழித்துத் தந்துள்ளார்.

புலம்பெயர் தமிழர்கள் மட்டுமல்லாது தமிழ்நாட்டுத் தமிழர்களும் இன்று கைசோர்ந்து போய்த்தான் கிடக்கின்றனர். பேரணிகள், ஆர்ப்பாட்டங்கள், உண்ணா நோன்புகள், மனிதச் சங்கிலி, மறியல், அனைத்துக்கு மேலாய்த் தொடர் தீக்குளிப்புகள் என்று அகிம்சை வழியின் அனைத்து வடிவங்களிலும் போராடினர். இந்த போராட்டங்கள் இலங்கை அரசை அசைத்துவிடும் என்று நம்பியதாகச் சொல்ல முடியாது. ஆனால் இந்திய அரசை ஒரு போர்நிறுத்தத்துக்காவது முயற்சி எடுக்கத் தூண்டும் என்று நம்பினார்கள். ஆனால் நடுவணரசும் தமிழக அரசும் தமிழக மக்களுக்குத் துரோகம் செய்தனர் என்பதே மெய்ப்பிக்கப்பட்டது. ஈழத்தமிழ் மக்களை சிங்களப் பேரினவாத அரசு கொன்று குவிப்பதற்கு இந்திய அரசு நயவஞ்சகமாக உதவியதன் மூலம் இலங்கையில் மட்டுமல்ல – இந்தியாவிலும் தேசிய இன விடுதலை கோரும் எந்த மக்களுக்கும் இதே கதிதான் ஏற்படும் என்று எச்சரித்திருக்கிறது. ஈழத்தமிழ் மக்களைப் போலவே தமிழக மக்களும் இந்த அவமானத்தையும் ஏமாற்றங்களையும் சுமந்து நிற்கிறோம். ஒரு சுடரை அணைப்பதற்கு இந்த அரசுகள் முயன்றன. அணையும் முன் அது பொறிகளாய்ச் சிதறியது. அதில் ஒன்றைப் படைப்பாளிகள் நெஞ்சில் ஏந்திக் கனலை வளர்க்க வேண்டும். ஒவ்வோர் எழுத்தும் அந்தச் சூட்டுடன் வரவேண்டும்.

– கவிஞர் வென்குலாரி

# 1. புலம்பெயர்ந்த தமிழர்

அழிகின்ற சொந்தங்களை
அவர் படும் இன்னல்களை
இணைய தளங்களில் பார்த்தும்
இதயம் வெடித்துச் சாகாமல்
அழுது அரற்றி
அதற்குமேல் ஒன்றும்
ஆற்ற இயலாது
புழுங்கித் தவிப்போர் தாம்
புலம் பெயர்ந்த தமிழர்



## 2. மனம்

கோபம் கொள்வாய்
குற்றம் காண்பாய்
சாபம் விடுவாய்
சவுங்கிப் போவாய்

நாபிக் கமலத்து
நாதமாய் எழுவாய்
கோபுரக் கலசமாய்
கௌரவம் வேண்டுவாய்

சோபிதம் காணும்
சூழல் நத்துவாய்
தாபம் கொண்டே
தவித்து நிற்பாய்

தீபங்கள் ஏற்றுவாய்
தீயாயும் எரிவாய்
காவாந்து பண்ணியே
காவலும் செய்வாய்

தூபம் காட்டுவாய்
'தூபம்' போட்டு
பாவம் செய்யவும்
பயப்பட மாட்டாய்

இப்படி....
ஏ...மனமே...!
திரண்ட நல்லதும்
தீயதும் என்று
இரண்டு பக்கங்கள்
உனக்கு உண்டு

என்றாலும் மனிதரோ...
தன்னில் இருப்பதை
ஒளித்து வைத்து
நன்றே செய்வதாய்
நடிக்கின்றாரே...!

## 3. வட்ட மேசை

எட்டி அமர்ந்தாலும்
சுற்றி அமர்ந்தாலும்
வட்டமாய் அமர்ந்து
வாய்கிழியப் பேசினாலும்
திட்டமாய் எந்தத் தீர்வையும்
எட்டவே முடியாதென்பதைப்
பட்டவர்த்தனமாய் சொல்லும்
மட்டரக மாநாடு



## 4. வெளிநாடு

தாய் மண்ணில் சுதந்திரமாய்
தலைநிமிர்ந்து வாழ்வதற்காய்
சேய்களெல்லாம் புலிகளென
செருகளத்திற் போராட - நாமோ
'போய்விடும் உயிர்' என்றஞ்சி
பெயர்ந்த புலம்; பணத்துக்காய்
நாய்களெனக் கால் நக்கி
நன்றி சொல்லும் புதியகளப்



ஒருசிலரை உச்சத்தில் வைத்து
சிலபேரைப் பிச்சையில் வைத்து
வெகு பலரை அந்தரத்தில் ஆட்டிவைக்கும்
ஆட்சி அதிகாரத்தை
அப்படியே தூக்கிப் பிடிக்கும்
அதிபயங்கர ஆயுதம்

## 6. மீன்

கன்னியரின் விழியிரண்டும்
கயல்களெனக் கவிஞரெலாம்
முன்னாளில் சொன்ன உவமையில்
மோகம் கொண்ட மானிடர்க்கு
உன்னைப் பிடிப்பதில் உவகையென்று
ஊரார் சொல்வது உண்மையோ?
இன்னமும் என்ன புகழ்போதை
இனியும் வலையில் வீழ்வதுமேன்?



# 7. விலைமகள்

வயிற்றுப் பசிக்குத் தீனியிட
பாழாய்ப் போன உடல்விற்று – ஆண்
சதைப் பசிக்குத் தீனியிடல்
உங்கள் 'தொழில்'
எனில்...
இருட்டில் வந்து உடற்பசியாறி
ஒளிந்து சென்றவர் 'உத்தமர்'
உங்கள் ஒருசாண் வயிற்றுக்கும்
உங்கள் உறவுகளின்
ஒவ்வொரு சாண் வயிற்றுக்கும்
ஊர் தெரியப்
பிறர் பசியாற்றிய
நீங்களோ 'விலைமகள்'



# 8. மீட்டாத வீணைகள்

அழகு உண்டு இவளுக்கு
அறிவு உண்டு இவளுக்கு
இதனோடு
இங்கிதம் இசைப்புலன்
பந்தபாசம் என்று
நல்லன பலதும்
நயமாய் உண்டு
எனினும்...
தங்கத்தால் அபிஷேகம் செய்தாலன்றி
தம்மினிய இணையாளாக
இவளை ஏற்க
இங்கெந்த ஆணுக்கு இதயமுண்டு





பாவமிவள்! மூலையில்
'பா'வங்களை மறைக்கின்ற
மீட்டாத வீணையிவள்

சோகங்கள் இவளுக்கு
சொந்தங்கள் ஆகிவிட
ஆசை
மேகங்கள் சூழ்ந்தும்
தாகம் தணிக்கும்
தடமின்றித் தவிக்கிறாள்

சமுதாய அடுப்பில்
பொசுங்கிய இவளின்
உணர்ச்சிக் கொந்தளிப்பின்
கந்தக வாசம்
யார் நாசியில் ஏறும்?

கனவுலகில் சஞ்சரித்து
சுயமீட்பில் கரைந்துபோகும்
இவள்மீது அனுதாப
அலையென்று வீசும்?

அடிபட்டு உதைபட்டு
அத்தனை செல்வத்தையும்
அந்நியனிடம் பறிகொடுத்து
நாடுவிட்டு நாடுவந்து
அகதிகளாய்க் கையேந்திய
பின்னரும்
நாங்கள் விட்டுவிடாத
அவமானச் சின்னம்
இதுவே எங்கள்
'பண்பாட்டு'ச் சிகரம்!





# 9. பெண்ணடிமை

பெண்ணடிமைக் கொடுமை பற்றி
பென்னம் பெரிய மேடையொன்றில்
சிம்மக் குரலெடுத்து நான் செய்த
சொற்பொழிவு கேட்டு
உணர்ச்சி பொங்க
பெண்ணியலாளரெல்லாம் தட்டிய
கரகோஷம் காதைப் பிளந்தது

கழுத்தில் விழுந்த மாலையோடும்
கரத்தில் விழுந்த விருதுகளோடும்
நெஞ்சு நிமிர்த்தி இல்லம் சேர
இல்லாள் மலர்ச்சியுடன்
இனிதே வரவேற்றாள்
மிகைப்படுத்தி நான் சொன்ன பொய்களை
மெய்யென்று நம்பிப் பெருமிதம் கொண்டாள்
நகை முகத்துடன் நான் பசியாற இலை விரித்து
நால்வகைக் கறிகளுடன் பரிமாறினாள்



ஒருவாய் எடுத்து ருசிக்கும் முன்னே
என்கை அவள் கன்னத்தில்
சுவடு பதித்தது.
"அறிவு கெட்ட நாயே
இந்த
உப்பில்லாப் பண்டத்தைக்
குப்பையிலே போடு"

கோபத்தோடு கொட்டிய
வார்த்தையில் மருண்ட
அவள் விழியில்
'பெண்ணடிமை பற்றிப் பேச
உனக்கென்ன தகுதி?'
என்கின்ற கேள்வியின்
கூர்மை.

உண்டு களித்து
உருண்டு புரண்டு
கற்றுத் தெளிந்து
கடமைகள் ஆற்றிய
சொந்த மண்ணை -
சொத்தை -
சுகத்தை -
சுயத்தை -
சுய கௌரவத்தை -
உரிமைக்காய் போராடும்
உறவுகளைத்
தொலைத்து விட்டு
எங்கேயோ... எப்படியோ...
உயிர் வாழும் ஒரே ஆசையில்
பிறந்த பூமிவிட்டு
ஓடிவந்த பெருமைக்கு
தேடிவந்த பட்டம்
'அகதி'

## 10. அகதி

## 11. நாக்கு

தட்டி வைத்தால் நீ மௌனி
கட்டி வைத்தால் நீ ஞானி
நீட்டி வைத்தால் நீ போகி
பூட்டி வைத்தால் நீ யோகி

துடுக்கு காட்டினால் குறையாளன்
இடக்கரடக்கினால் பொறையாளன்
சத்தியம் பேசினால் சான்றோன் நீ
சத்தம் போட்டால் அறிவிலி நீ

நித்தம் நித்தம் நினைந்துபார்
உத்தமம் எதுவோ அதன்வழிசேர்.

## 12. பனிமழை

வெண்பனித் தூவல்
வீட்டு வாசல் வரை
பொழிகிறது!
அந்த
அழகுக் குவியலை
அள்ளி அளைய
ஆவல் துடிக்கிறது

கோள உலகின்
வடக்குத் திசையில்
குடியேறிய நோர்வேயில்
கையும் காலும் விறைக்க
காளை என் உடம்பு நடுங்க
அந்த வெண்பனி மழையில்
குளித்துக் கழிக்கின்ற போதே

உலகின் தென்கோடி இலங்கையில்
நான் பிறந்த
ஈழத்து பூமியில்
கொட்டும் குருதி மழையும்
இடியாய் வெடிக்கும்
கொத்துக் குண்டுகளின் ஓசையும்
நெஞ்சைப் பிளக்கிறதே!

இரத்த
மழை நிற்கும் அறிகுறியாய்
நம்பிக்கை மின்னல் வெட்டும்
நாளெந்த நாளோ?





# 13. இழப்பு

நாட்டைவிட்டு வந்த பின்னர்
நாதியற்ற பிரக்ஞையுடன்
நாட்களைக் கழிப்பதே
பெரும் பிரயத்தனம்!

அந்நேரம்...
உன்நினைவு ஒன்றே
என்னை உயிர்ப்பித்துக்
கொண்டிருந்தது

ஒருநாள் அதிசயமாய்
ஓரிரு வரிகளில்
உன்மடல் வந்து சேர்ந்தபோது
உலகையே மறந்தேன்
ஒருதுன்பம் இனியில்லை
உறவாய் நீ எனக்கு
இருப்பதே உலகமென்று
சிறுபிள்ளை போலவே
துள்ளி மகிழ்ந்தேன்

பதில்மடல் நானும் போட
கடிதப்
பரிமாற்றங்கள் கனஜோராய்
நடந்துகொண் டிருந்தது





அவ்வப்போது
அது இது தேவையென்று
சூசகமாய் நீ கட்டுகின்ற
சொல் முடிச்சுகளின்
சிக்கலை எளிதாய் அவிழ்த்து
சிறிதும் பெரிதுமாய்
தொகைகளும், பரிசுப்
பொருட்களுமாய் அனுப்பியதன்
கணக்கொன்றும் நான்
பார்க்கவில்லை

கடன்வந்து சூழ்ந்ததை
அறிந்த கணத்தில்
சற்றுத்
தடுமாறித் தான்போனேன்

எனது ஆறுதலுக்கு
நீ சில
தேறுதல் மொழிகளைத்
தெரிவிப்பாயென நம்பி
நான் எழுதிய வரிகள்
உன்னை வந்து
சேர்ந்த சில
தினங்களுக்குப் பின்னர்
அந்த முகவரியில்
நீ இல்லையென்று
அறிந்தபோது
விக்கித்துப் போனேன்

கறவை மாடாய் நான்!
கறந்து முடிந்தபின்
மடிவற்றிப் போன இந்த
மதியிலியை நீ
மறந்து போனதில்
அதிசயமில்லை





# 14. மனக்குரங்கு

குரங்கொன்று எஞ்ஞுன் நெஞ்சக்
கூட்டினுள் வளர்த்தேனே – என்
அறிவறிந்த நேரங்களில்
அதன்திமிர் அடக்கப்
பெரிதும் போராடிப்
பயனின்றிச் சலித்தேன்
சிறுசிறு அனுபவங்கள்
சிறப்பான ஒன்றை
உணர்த்திற்று

மனக்குரங்கு எப்போதும்
வன்முறையால் அழியாது – என்
வயப்படவும் மாட்டாது
தன்னையே கருதுங்கால் – சிறிது
தயவுபண்ணிக் கொள்ளும்

ஞானிகள் வசப்படும்-அது
நம்மைநிதம் ஏய்க்கும்
மோனத் தவமியற்றி
முடிச்சதனை அவிழ்த்திட
வானம் புகழ்ந்தாலும்
வாழ்க்கை சதமே

சிந்தை விரிந்திட
சித்தம் அடங்கிடில்
சித்தர் நிலைதனை
மனக்
குரங்கது எய்திடுமே

## 15. மரம்

மரங்களை அழித்து
மனைகளைக் கட்டும் மனிதா!
இயற்கையின் மீது
உனக்கென்ன கோபம்?

உன்மனதில் பசுமை
வறண்டு போனதென்று
இயற்கையின் செழுமையை
இச்சையோடு மேய்வதில்
உனக்குத்தான் எவ்வளவின்பம்!

மரங்களை அழித்தால்
மழை பொழியாது
மழைத்துளி இன்றேல்
உயிர்த்துளி ஏது?

உயிர்த்துளியில் உருவாகும்
உன்பிற் சந்ததியர்
இயற்கையோ டியைந்து வாழ
உன் பங்காய்
ஒருமரமேனும் வளர்ப்பதென
உறுதியொன்று கொள்கையில்
உலகம் செழிக்கும்
உன் சந்ததி வாழ்த்தும்

## 16. இன்னும் சாதி

ஆண்சாதி பெண்சாதி யன்றி
வீண்சாதி வேறொன்று இல்லையென்று
நாம்
ஒட்டிக் கொள்கிறோம்
உரசிக் கொள்கிறோம்
கட்டிக் கொள்கிறோம்
குலவிக் கொள்கிறோம்
திருமண மென்றால் மட்டும்
கொள்வனவு கொடுப்பனவுகளில்
தள்ளியே நிற்கின்றோம்
தடுமாறாமல்
சாதியே பெரிதென்கிறோம்



# 17. எம்மினம்

கல்தோன்றி மண்தோன்றாக்
காலத்துக்கு முன்தோன்றிய
மூத்த குடிகளென்ற
கற்பனையில்
தலைகனத்துக் கிடந்தவினம்

மோட்டுச் சிங்களவன்
மோட்டுச் சிங்களவன் என்று
தங்களை மேதாவிகளாக்கிய
அதி புத்திசாலிகளின்
அரிய இனம்

வரலாறு மன்னிக்காத
தவறுகள் அரங்கேறியபோதும்
சுயநலப் பீதியில்
வாய் பொத்திக்கிடந்த
முதுகெலும்பு இல்லாத
முற்போக்காளர்களின்
ஒரே இனம்

வரப்பிரசாதமாய்க் கிடைத்த
உரிமைகளையும்
சந்தர்ப்பங்களையும்
வக்கிரசுயநலத்திற்குப்
பலியிட்டதைப்
பார்த்துக்கொண்டு
இருந்தவினம்

கசாப்புக் கடைக்காறனுக்காய்
ஓட்டிச் செல்லப்படும்
ஆடுகளாய்
எம் உறவுகளைச்
சாய்த்துக் கொடுத்துவிட்டு...



முகவரியற்ற கடிதங்களாய்
நாடுகளற்ற பரதேசிகளாய்
அந்நிய மோகத்தில்
அழிந்து போவதில்
ஆத்ம திருப்தியடையும்
அதீத சந்தர்ப்பவாதிகளின்
இனம்...

அண்ணன் தம்பி
அக்கா தங்கை
மாமா மச்சான்
ஊரான் உறவான்
எல்லோரையும்
அழைத்துவிட்டு
ஐரோப்பாவில் இருந்து
அரசாங்கம் நடத்தப்போகும்
அதிநவீன இனம்

# 18. செந்தமிழ் செல்லும் வழியெது பார்

செந்தமிழ் செல்லும் வழியெது பார்
செங்கனி சுவைதரும் மொழியெது பார்
பைந்தமிழ்ச் சொல்லின் அழகது பார்
பாரினில் இனிய மொழியிது பார்

முத்தமிழ் என்று வகை பிரித்த
முதுமை மொழியிதன் வாழ்வைப்பார்
தித்திக்கின்ற சொற்களிலே
தேர்ந்த மொழியின் தெளிவினைப் பார்

கவிகளில் சொல்லின் வனைவினைப் பார்
கதைகளில் வர்ணனை நிலவினைப் பார்
புவிதனில் மூத்த தமிழ் மொழியின்
பேரின்பம் சொரியும் அழகது பார்





இலக்கணம் என்ற வகுப்பினைப் பார்
இலக்கியம் சொல்லும் வனப்பதைப் பார்
துலக்கிடும் தொன்மைக் கருத்தினைப் பார்
தூயமதி அழகை உள்ளே பார்

சங்கம் வளர்த்த மொழியிது பார்
சபைகள் மலைத்த விதமதைப் பார்
எங்கள் நாளில் அழிவதைப் பார்
ஏனிந்த நிலையென யோசித்துப் பார்

தாயே அழிகின்ற நிலையது பார்
தனயர் நாமென்ன செய்தோம் பார்
வாய்த்த இடமெலாம் வளர்த்தவளை
வாழ்வில் நிலைநிறுத்திடப் பார்

பிறந்த மண்ணை விட்டொழித்து
பிறிதொரு நாட்டில் வளர்ந்தாலும்
சிறந்த நம்தாய் தமிழ்மொழியின்
சீரிளமைத் திறனை வியந்துபார்



# 19. என் காதலி



எழுபதில் பிறந்து
இருபது வயதில்
என்னுடன் கலந்தவள்
இன்றுமென் சல்லாப உலகில்
இணைபிரியாத்
துணையுமாயிருக்கிறாள்

அவளின் அழகு மேனியில்
என் விரல்கள்
அனுமதியில்லாமல் அளைய...
அரைக் கண் மூடி
அனுபவிப்பாள்
சொன்னதைத் திருப்பிச் சொல்வாள்



சுயமாயும் சில பேசுவாள்
என்றாலும் என்னவள்
எதிர்த்தே பேசாத நல்லவள்

என்னுடைய நாள்வேலை
இவளுக்கு நாழிவேலை
அவளது மூளையின்
அதீத சக்தி அப்படி

கண்டபோது முதலில் சண்டை
அவளை நான்
'உண்ட'போது தெரிந்தது
சொர்க்கம்

விண்டு சொல்ல முடியுமோ –
விரக தாபத்தின்
இண்டு இடுக்கிலும்
இன்பமிருப்பதை!

# 20. ருசியா

உள்ளே நடந்தது
உலகுமுன் தெரிந்ததில்லை

வல்லரசோடு வளமான
நல்லரசென்றும் காட்டிற்று

எல்லோரும் வியந்தனர்
எடுத்துக் காட்டாய் இயம்பினர்

உள்ளே குழம்பிற்று
உலகம் திகைத்தது

ஒன்றாய் இருந்தது
ஒன்பதாய் ஆனது

அல்லல் தெரிந்திட
அவஸ்தை புரிந்தது

ஈந்த கைகள் இன்று
இரந்து நிற்பதறிந்து

பூர்வீகம் தெரிந்தோர்
பதைத்துநின்றாரே!

# 21. எயிட்ஸ்

ஆடாத ஆட்டமெல்லாம்
ஆடிநின்ற மனிதன்
கூடாத சேர்க்கையுடன்
கும்மாளமிட்டான்

எதிரி எனக்கில்லை யென்று
கர்வமுற்றான்
கிருமிகள் விழித்துக் கொண்டு
தாக்குதலுக்குத் தயாராயின

"உன்னோடு சமர்புரிவேன்"-
செங்கலம் கொக்கரித்தது
மனிதன் விழித்துக் கொண்டபோது
எயிட்ஸ் அவனுடன்
கைகுலுக்கிக் கொண்டது.

# 22. பனிப்பூக்கள்

அவள் வேட்கையுற்றாள்
துருவக் குளிர்
அவள் கருவறையில்
தன் ஆண்மையைச்
செலுத்தியது
காற்றின் சுழற்சியில்
பாவம் அவள்...
பிரசவ வேதனையில்
துடித்தாள்

இடியும் மின்னலும்
மருத்துவிச்சி யாய்நின்று
வைத்தியம் பார்த்ததில்
வெண்பனிப் பூக்களைப்
பிரசவித்தாள் அம்மம்ம...
என்னே அழகு அந்த
வெண்பனிப் பூங்கொத்து

# 23. துருவத்துக் குளிர்கால பூமி

நேற்றுவரை
பச்சைப் பட்டுடுத்தி
பருவ எழில் பொங்க
சூரியனைப் புணர்ந்து
சுமங்கலியாய்
செம்மாந்திருந்த நீ
இன்று...
சூரியக் கணவனை யிழந்து
வெள்ளுடுப்புக் கோலத்தில்
விதவையாய் நிற்கின்றாய்

என்றாலும் எங்கள்
சாவித்திரியாய் நிமிர்ந்து
எமனை எதிர்த்து
சூரியன் எனும் சத்தியவானை
நாளை நீ மீட்டு வருவாய்
எனும் நம்பிக்கையில்
அந்த நாளுக்காய்
காத்திருக்கின்றோம்

# 24. சீ(ர்)தனம்

அவன் –
சமுதாயச் சந்தையில்
விற்பனைக்கு நிற்கும்
சம்சார மாடு!

அதிசயம்...!
அவனை
விலைபேசி ஒட்டி வர
காரும் பங்களாவும்
காடு கரை வீடும்
பணமும் நகையுமென்று
படித்த பெண்ணும்
படிக்காதவளும்
அவரவர் வசதிக்கேற்ப
கொடுத்த விலைக்குப் பேர்தான்
சீ(ர்)தனம்

## 25. கலவி

ஆசை துளிர்க்கும் நேரமெலாம்
ஆணும் பெண்ணும்
இணைந்தும் பிரிந்தும்
பிரிந்தும் இணைந்தும்
அனுபவிக்கும்
சக்க(ரை)ர இனிப்பு



## 26. கெமறா

எனக்குக் கண் இல்லை
ஆயின்
பார்வையுண்டு
நான் பார்த்ததை
அப்படியே அச்சொட்டாய்
நீங்களும் பார்க்கவென
காட்சிப் படுத்திக்
காகிதத்தில் பதித்துக்
கைகளில் தருவேன்





## 27. உறவு

மாதொருத்தி யுடன்கூட ஆசை
ஆசையோ கூடவில்லை
மதுக்கோப்பை தந்ததந்த
மயக்குகிற இன்பமதை

## 28. காற்று

இதமாய் இருந்தால் தென்றல்
மிதமாய் வீசினால் காற்று
சீறிப் பாய்ந்தால் புயல்
கோரத் தாண்டவம் ஆடி
கொடூரம் கொண்டால்
சூறாவளி, சுனாமி யென்று
காற்றுக்குத்தான்
எத்தனை யெத்தனை
பெயர்கள்
என்தமிழ்ப் பெண்ணாள்
சூட்டினாள்!






## 29. அவள்

விழிகளை யவள் காட்டினாள்
வழிநான் கண்டேன் காதலுக்கு
புன்சிரிப்பை யவள் சிந்தினாள்
என் இருப்பை நான் மறந்தேன்
தன்னையவள் எனக்குத் தந்தாள்
என்னையே நான் இழந்தேன்
தாலியை யவள் நீட்டினாள்
பாலில் விஷமாய்ப் பயந்தேனே!




## 30. பழைய காதலி

உன்குரல் கேட்டுக்
குழல் என்றேன்
செவ்விதழ் கோவைப்
பழமென்றேன்
முகமது மதியெனக்
கண்டு கொண்டேன்
முகமதின் கருவிழி
மயக்க நின்றேன்
கரங்க ளிரண்டும்
யாழென்றேன்
முகர்ந்துனை நாசியில்
மணங் கண்டேன்
மானம் காட்ட நீ மறுத்தாய்
இனம் காண நான் மறந்தேன்



# 31. தமிழா

இந்திய ரெனநீர் ஒளிந்து கொள்ளலாம்
மலேசிய ரெனஅவர் மறைந்து செல்லலா
சிங்கப் பூர்என் ஊரென்று
சிலர் பெருமை பீற்றிக் கொள்ளலாம்
இலங்கையரென்றால் புலிகளென – நாம்
இறுமாப்பும் கொள்ளலாம்
ஆயின்
தமிழரென்று ஒன்றுபட்டாலே
தரணியில் அடையாளம் பெறுவோம்
தமிழர் நாம் தனித்தனியாய் நிற்பதாலே
தண்டெடுத்தவனெல்லாம் தட்டிப் பார்க்கின்றான்
ஒன்றுகூடுவோம்: ஒருதமிழ்த்தாய்
மக்கள் என்போம்
வென்று காட்டுவோம் – புது
விதியொன்று சமைப்போம்.

# 32. துன்பமில் வழி

அன்புளோர் எங்கே சென்றார்?
அகிம்சை ஏன் மறைந்தது?
வன்முறை இங்கேன் வந்தது?
வையம் ஏனின்று அழியுது?

நெஞ்சமே கொஞ்சம் எண்ணாயோ?
நித்தம் நன்மை நினையாயோ?
வஞ்சம் கொண்ட வன்முறையை
வையம் விட்டு விரட்டாயோ?

நஞ்சும் வெறியும் கொண்ட இனம்
நரபலி கேட்டு ஓரினத்தை
வெஞ்சினம் கொண்டுதன் விரலிடுக்கில்
வீணாய் உயிர்ப்பலி கொடுக்கிறதே

கொஞ்சி மகிழ்ந்திடும் பூமிதனில்
கோரச் சத்தமும் வருகிறதே!
பிஞ்சு உள்ளங்கள் வெதுண்டிடவே
பிணங்கள் மேடாய்க் குவிகிறதே

சிந்திப்போம் நாம் சிந்திப்போம்
சிந்தையி லன்பை விதைத்திடுவோம்
சந்திப்போம் நாம் சந்திப்போம்
சன்மார்க்க வழியினைச் சந்திப்போம்

பெண்ணும் ஆணும் சமமாகப்
பேணி அன்பைக் காத்திடுவோம்
மண்ணும் விண்ணும் மகிழ்ந்திடவே
மானிட ரெல்லாம் ஒன்றிணைவோம்

# 33. அகிலமெங்கும் அகதிகள் என்று ஆனோமா?



அகிலமெங்கும் அகதிகள் ஆனோமா?
அம்மணமாய் அரங்கில் நின்றோமா?
செகமெலாம் சுற்றி வந்தாலும்
சொந்த ஊர்போக முடிகிறதா?

இந்நிலை எங்களின் விதியாமோ?
இரந்து திரிவதே நிரந்தரமோ
தன்மான மிழந்த தமிழர்களாய்
தரணியைச் சுற்றி வருவோமோ?

தாய்நா டெம்மைத் துரத்தியதோ?
தங்க இடமின்றித் தள்ளியதோ?
பேயெனப் பிரிவுகள் பேசுகிற
பேதமை யால்மதி இழந்தனரோ?

வன்முறை யிங்கே வசந்தம் கண்டதால்
வாழ்முறை யிங்கே வினாக்குறி யானது
மண்மீது மனிதவுயிர் மலிந்து விட்டதால்
மானுடம் இங்கே மரித்துப் போனதா?

நிம்மதி எம்மை வஞ்சித்து விட்டதால்
நித்தமும் உறக்கம் தொலைந்து போனதே!
எம்மதி கொண்டெமைக் காத்திடுவோம்
எங்கும் வன்மம் சூழ்ந்துள்ளதே!

உலகமே எம்மை வெறுத்து விட்டதா?
'ஒழிக'எனும் குரல் ஒலித்து விட்டதா?
அழிதலே எமக்கு விதியுமானதா?
அவலமே எமக்கு விருந்து படைத்ததா?



# 34. நாம்

நெஞ்சக் கடலிலே
நீந்துகின்ற மனவோடம்
வஞ்சியின் நினைவாலே
வழிதவறிக் கரைதேடும்

கொஞ்சிடநீ யில்லாத
கொடுமையிது எனக்கின்று
பஞ்சினும் மெல்லியளே!
பரிதவிப்பை என்னென்பேன்!

நெடுங்கடலின் தூரமது
நம்மையே பிரித்ததனால்
கடுந்துயரால் வாடுகின்றேன்
கன்னியினைக் காண்பதெப்போ!

குலமகளே நீ வரணும்
குங்குமமும் நான் தரணும்
நிலவொளியில் நாம் கூடி
நெஞ்சாரத் தழுவிடணும்

குரலினிமை கேட்டலர்ந்து
கொஞ்சிடத் துடிக்கையிலுன்
சரசத்தில் எனைமறந்து
சல்லாபித் திடல்வேண்டும்

இதழோடு இதழ்பதித்து
இன்பத்தை உறிஞ்சிடவும்
விதவிதமாய்க் கலவியின்பம்
விரும்பி யறிந்திடவும்

உடலிரண்டும் பிரியாது
உலகதனை நினையாது
மடல்விரித்த மலரதுபோல்
மங்கையுனைக் காணவேண்டும்

காதல்மரம் பூப்பெய்தி
காமப்பூ பூத்ததடி
பூப்பறித்து உடலிணைந்து
புதுக்கன்று வளர்ப்போமா?

ஸ்ரீ

## 35. ஆதவன் தொட்டால்

ஆதவன் தொட்டால்
அழகுமலர் இன்புறும்
மாதவள் தொட்டால்
மன்னன் மயங்கிடுவான்

தென்றல் தொட்டால்
தேகம் மகிழும்
தொன்மைத் தமிழ்மொழி
தொட, செவியினிக்கும்

கல்லெறிந்து கவர்ந்த கன்னி
கண்சிமிட்டி னாலும்
இல்லாள் எதிர்வந்து
இலேசாய்த் தொட்டாலும்

சொல்லொணாப் பேரின்பம்
சுட்டெரிக்கும் வெயிலூடே
மெல்லவரும் நிழல்போல
மேனி சுகம்பெறும்

துளிர்த்திடும் இலையில்
துளித்துளிப் பனியும்
குளிர்நில வதனில்
குமரிப் பெண்ணும்

மழைத்துளி தொடுமெனில் மயிலும்
மழையைத் தொடும் வானமும்
குழைந்து குழைந்து இன்பக்
கடலில் முத்தெடுக்கும்

மகிழ்ச்சி தொட்டால்
மானிடர்க்கு மகிழ்ச்சி
மகிழ்ச்சி விட்டால்
மானிடர்க்கு விரக்தி.

## 36. விலங்கு

[illegible] சிரிப்பொலி
...திய கனத்தில்
சித்தம் கலங்கின
சோதனை எனக்கு

பொங்கிய இதயம்
புகலிடம் தேடி
மங்கையைச் சேர
மயங்கினன் நானே!

மயங்கின என்னை
மாட்டிய விலங்கால்
தயங்கிய படியே
தலைகுனிய நின்றாய்

நெஞ்சுக்குத் தெரியும்
நேர்மை புரியும்
அஞ்சிடாது தமிழால்
அதைச்சொல் வெளியே

வேசையொப்ப நிலையில்
வெருட்சியைக் கொண்ட
பாசங்கெட்ட மனிதப்
பதர்களிடை அலையினும்

சொல்லுவதெல்லாம் தி
சுட்டெரிக்கும் நிலைமை
நல்லதமிழ்ச் சொல்லெ
நம்காதல் நவின்றிடுமே

வஞ்சகமே வாய்த்த
வையகம் இதிலே
நெஞ்சமதை நிமிர்த்தி
நீதிகேட்டு நிற்போம்

அஞ்சிட மாட்டோம்
அடிபணிய மாட்டோம்
வெஞ்சினம் கொண்டோரின்
வேசத்தைக் கலைத்திடுவோம்.

## 37. சுயநலம்

சுயநலமின்றி வாழ்தலென்
சிறுவயது சபதமென்று
நயமாகப் பேசிடுவார்
நாவினிக்கப் பொய்சொல்வார்

பொதுநலமே தன் வாழ்வென்பார்
பொதுவில் ஏதும் செய்திடார்
மதுவும் மாதுவும் தவறென்பார்
மது. மாதின்றி வாழ்ந்திடார்

வறுமைக்கு நான் எதிரி; என்னிடம்
வரும் ஏழையின் புன்சிரிப்பில்
இறைவனையே காணுகின்றேன்
ஈதொன்றே இன்பமென்பார்

விடுதலை வேட்கை கொப்புளிக்க
வீரனாய்க் களத்தில் நிமிரென்பார்
திடுதிப்பென் றிவர் மட்டும்
திருட்டுத் தனமாய் விமானமேறி

வெளிநா டொன்றில் கால்பதித்து
வெறுங் கைகளை முன்னே நீட்டி
துளித் துளியாய் சேதிகள் பெற்று
துளிர்த்திடுவார் ஒரு செல்வந்தனாய்



## 38. கன்னித் தமிழ்

கன்னித் தமிழ்ப் பெண்ணைக் கண்ணுற்றே
காதலால் அவளைக் கவிவடித்தேன்
கன்னற் சுவைகள் சேர்ந்திடவே யவள்
கடைக்கண் பார்வை வேண்டி நின்றேன்

கட்டிலில் இலக்கணம் அவள் படிப்பாள்
காதலில் இலக்கியம் நான் படைப்பேன்
ஒட்டியுற வாடுமென் இதயமந்த
உயர்தமிழ் சங்கத்தின் உறைவிடமே

தன்னேரில்லாத் தமிழ் மொழியின்
தண்சுவை தன்னில் மயங்கியபின்
இன்னோர் மொழிப்பெண் வேண்டாதே
எந்தன் கற்பைக் கட்டிநிற்பேன்

## 39. இரும்புக் கோடுகள்

நீண்டு செல்லும்
இரும்புக் கோடுகளின்
அசையாத இறுக்கம்
அதைத்
தாண்டிச் செல்லும் வாகனத்தில்
தற்பெருமை பறைசாற்றும்
தனவந்தர் கூட்டம்

தரிப்புகளில் நிற்கையில்
தளர்ந்த உடலுடன்
கையேந்தி நிற்கும்
சிறுவர் கூட்டம்

ஏற்றத் தாழ்வுகளை
அடையாளப் படுத்தும்
குறிப்பிடங்களுள்
இதுவும் ஒன்று

அடையாளங்களை அழித்தெழுத
அரசு எடுக்கும்
நடவடிக்கை தான்என்ன?

# 40. தீப்பெட்டித் தொழிற்சாலைக் கூலிகள்

சாறுபிழியப்பட்ட
சக்கைகள்
கோதி எடுக்கப்பட்ட
முலாம்பழங்கள்
சான் ஏறிவிட்ட
குழந்தைகள்
சுதந்திரத்தை சுவைக்காத
மானிடர்கள்
உலகத்தின் வருங்காலம்
அபாயத்திற்கும்
அடக்குமுறைக்கும்
பலியாகும்
அவலம்

